அருள்மிகு உத்தமர் திருக்கோயில்

# தல வரலாறு வெளியீட்டு விழா

அழைப்பிதழ்

25.11.1993





கோயில் விமானங்களின் தோற்றம்

## மும்மூர்த்திகள் திருத்தலம்

ர்மிகு உத்தமர் திருக்கோயில்

ண்டார் கோயில் அஞ்சல்

ட்டம், திருச்சி மாவட்டம்.



# தல வரலாறு

# மும்மூர்த்திகள் திருத்தலம்

# அருள்மிகு உத்தமர் திருக்கோயில் வரலாறு

## (திருக்கரம்பனூர்)









ஆசிரியர்கள் :

கி. ஸ்ரீதரன், எம்.ஏ.,
பதிவு அலுவலர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
திருச்சிராப்பள்ளி 20

சி. குஞ்சிதபாதம், பி.எஸ்ஸி.,
செயல் அலுவலர்,
அருள்மிகு உத்தமர் திருக்கோயில்

1993

முதற் பதிப்பு : 1971

திருத்திய பதிப்பு : 1993

உரிமை : திருக்கோயிலைச் சார்ந்தது

விலை : ரூ. 5.00




திரு. ஜி. இராஜ நாயகம் பி. ஏ., பி.எல்

துணை ஆணையர்

இந்து சமய அறநிலையத் துறை, திருச்சிராப்பள்ளி

திரு. ப. சிவக்குமார், பி.எஸ்.ஸி., பி.எல்.,

உதவி ஆணையர்

இந்து சமய அறநிலையத் துறை, திருச்சிராப்பள்ளி.

# அணிந்துரை

திரு. ஜி. இராஜநாயகம் பி.ஏ.பி.எல்.

துணை ஆணையர்

இந்து சமய அற நிலையத்துறை

திருச்சிராப்பள்ளி

ஆக்கல், அழித்தல், காத்தல் ஆகிய முத்தொழிலுக்கு தெய்வங்களாக பிரம்மா, சிவன், திருமால் ஆகிய தெய்வங்கள் கூறப்படுவதுண்டு. இந்து சமயத்தின் இரண்டு முக்கிய சமயங்களான சைவமும், வைணவமும் வெவ்வேறாக கருதப்பட்டாலும், உலக மக்களை காப்பதற்காகக் கோட்பாடுகளை சொல்வதில் இரண்டு சமயங்களுக்கும் வேறுபாடு இல்லை. சைவமும், வைணவமும் ஒருங்கே இணைந்து இரண்டும் ஒன்றே என்ற உண்மையை விளக்கும் தலமாக அருள்மிகு உத்தமர் கோயில் அமைந்துள்ளது. சிவபெருமான் பிச்சாடனராகவும், பெருமாள் புருஷோத்தமன் என்ற திருநாமங்களில் போற்றப்பட்டு வருகிறார். ஆக்கல் தொழிலின் தெய்வமான பிரம்மாவுக்கு திருக்கோயில் அதிகம் இல்லை என்றாலும் இங்கு உத்தமர் கோயிலின் சிறப்பான மூர்த்தியாக போற்றி வழிபடப் பெறுகின்றார். முத்தொழில் புரியும் மும்மூர்த்திகளும் ஒன்றாக உலக மக்களுக்கு அருள் பாலிக்கும் தன்மை இத் திருக்கோயிலின் மிகச் சிறப்பானதொன்றாகும். கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்று தெய்வங்களுக்குரிய முச்சக்திகளுக்கான கலைமகள், அலைமகள், மலைமகள் மூவரையும் இங்கே தரிசிக்கலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த தலம். 108 வைணவத் திருப்பதிகளில் ஒன்றாகவும் விளங்குகிறது. இத்தலத்தின வரலாற்றுச் சிறப்பையும், கோயிலின் பெருமையைப் பற்றி மிகச் சிறப்பாக தொகுத்தளித்த திரு. கி. ஸ்ரீதரன், பதிவு அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை அவர்களின் பணி மிகவும் பாராட்டுக்குரியது. இவரது நூல் வெளியிடும் பணி மேன்மேலும் தொடர வாழ்த்துகிறேன். இத்திருக்கோயிலின் தல வரலாற்றினை வெளியிட முயற்சி மேற்கொண்ட இத்திருக்கோயிலின் செயல் அலுவர் திரு சி. குஞ்சிதபாதம் அவர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

29.10.93 ஜி.இராஜநாயகம்

# அணிந்துரை

திரு. நடன. காசிநாதன், எம்.ஏ.,
இயககுநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை 600 113

இத்துறையின் பதிவு அலுவலர் திரு. கி. ஸ்ரீதரன் அவர்களும், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை செயல் அலுவலர் திரு. சி. குஞ்சிதபாதம் அவர்களும் இணைந்து எழுதப்பெற்ற "மும்மூர்த்திகள் திருத்தலம் - உத்தமர் திருக்கோயில் வரலாறு" மிக எளிய, இனிய நடையில் திருக்கோயிலின் அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கி அரிய வரலாற்றுச் சிறப்புடன் எழுதப்பெற்றிருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது. தமிழகத்தில் மும்மூர்த்திகளையும் வழிபடும் வழக்கம் கி .பி . 6 -ஆம் நூற்றாண்டு தொடங்கி இருந்து வந்தது என்றாலும் பிற்காலங்களில் அவ்வழிபாடு சிவனுக்கும், திருமாலுக்கும் மட்டுமே என்ற வகையில் நிலைத்து நின்று விட்டது. பிரமனுக்கு வழிபாடு மிக அரிதான நிலையிலேயே தமிழகத்தில் காணப்படுகிறது. ஆக்கும் கடவுளாகிய பிரம்மனுக்கு காணப்படுகின்ற கோயில்களில் அருள்மிகு உத்தமர் திருக்கோயில் மிக முக்கிய திருத்தலமாக அமைந்து இருக்கின்றது. இத்திருத்தலத்தின் வரலாறு பற்றி சிறிய அளவிலே முதற்கட்டமாக எழுதி வெளியிட வேண்டுமென்று செயல் அலுவலர் விரும்பி அதைச் செயல்படுத்தி இருப்பதைக் காணும்போது இதைப்போன்று மற்ற திருத்தலங்களுக்கும் தல வரலாறு எழுதி வெளியிட்டால் கோயிலைப் பார்க்க வருகின்ற பக்தர்களுக்கும் மற்றும் கோயில் பற்றி ஆய்வு செய்ய வருகின்ற ஆய்வாளர்களுக்கும் பேருதவியாக அமையும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

இத்தலத்திற்குத் திருக்கரம்பனூர் என்பது பழைய பெயர். இத்தலத்துக் கல்வெட்டில் இவ்வூர் திருக்கரம்பத்துறை என்றும், சிவபெருமான் திருக்கரம்பத்துறை மகாதேவர் என்றும் கூறப்படுகிறார். மேலும் இங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாள் ஞுஅழகிய உத்தமர்து என்றும் கல்வெட்டில் பேசப்படுகிறது. மேற்காணும் வரலாற்றுச் சிறப்புகளை உள்ளடக்கிய இத்திருக்கோயில், இன்றைக்கு மக்களால் பெரிதும் போற்றி பாராட்டப்படுவது மகிழ்ச்சிக்குரிய ஒன்றாகும். இத்தகைய வரலாற்றுச் சிறப்பும், ஆன்மீக சிறப்பும் கொண்டு விளங்குகின்ற இத்தலத்திற்கு அருமையான விளக்க நூல் எழுதியிருக்கின்ற ஆசிரியர்களை மனமாரப் பாராட்டுகிறேன். இந்த நூலைப் பொதுமக்கள் வாங்கி படித்து பயன் பெற வேண்டும் என்று அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்,

1.11.93 — நடன காசிநாதன்

# முன்னுரை :

காவிரி ஆறு பாய்ந்து வளம் செய்யும் சோழ நாட்டில் இறையுணர்வு, வரலாற்றுச் சிறப்பு மிக்க பல கோயில்கள் உள்ளன. திருச்சி மாவட்டத்தில் வட காவிரி எனப்படும் கொள்ளிடம் ஆற்றின் கரையில் உள்ள திருத்தலம் தான் அருள்மிகு உத்தமர் கோயில். மும்மூர்த்திகளும் தம் தேவியர்களுடன் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள் பாலிக்கும் அற்புதத்தலம் இது. வியாழக்கிழமை தோறும் இக்கோயிலுக்கு வரும் பக்தர்களின் வருகை அதிகரித்து வருகிறது. இக் கோயிலின் தல வரலாறு 1971ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 1971ஆம் ஆண்டு வெளியிட்ட தல வரலாற்றின் அடிப்படையில் திருத்தியப்பதிப்பாக இப்பொழுது வெளியிடப்படுகிறது. இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய திரு. ஜி. இராஜநாயகம், துணை ஆணையர், இந்து சமய அறநிலையத் துறை, திருச்சிராப்பள்ளி, திரு. நடன. காசிநாதன், இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை,மற்றும் இக்கோயில் கல்வெட்டுக்குறிப்புகளைத் தந்து உதவிய அரியலூர் கல்லூரி வரலாற்றுத் துறை விரிவுரையாளர் திரு. இல. தியாகராசன் ஆகியோருக்கு எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்

இந்நூலை வெளியிட உதவிய இறை அன்பர்கள் திருவாளர்கள் திரு. எஸ் பெருமாள் சாமி, திரு. எஸ். இராஜகோபால், திரு. ஏ.எம். ஆறுமுகம் மற்றும் விளம்பரம் கொடுத்து உதவிய பெருமக்களுக்கும் மற்றும் ஆலய பேஷ்கார் திரு. சு. சீமான் நடராஜன் அவர்களுக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

*அன்புள்ள,*

*கி. ஸ்ரீதரன்- சி. குஞ்சிதபாதம்*

# பொருளடக்கம்



யானும் தானா யொழிந்தானை
யாதும் யாவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனு
மாகிப் பணைத்த தனிமுதலைத்
தேனும் பாலும் கன்னலும்
அமுதுமாகித் தித்தித்து என்
ஊனில் உயிரில் உணர்வினில்
நின்ற ஒன்றை யுணர்ந்தேனே.

- திருவாய்மொழி

# திருக்கோயில் பற்றியக் குறிப்பு

கோயில் :உத்தமர்கோயில், திருக்கரம்பனூர்

இடம் :பிட்சாண்டார்கோயில்

பிரம்மா : பிரம்மா

சரஸ்வதி : சரஸ்வதி

பெருமாள் : திருமால் புருஷோத்தமர்

தாயார் :பூரணவல்லி

சிவபெருமான் : பிட்சாடனர்

அம்பாள் :சௌந்தர பார்வதி (வடிவுடையநாயகி)

தனிச்சிறபபு : பிரம்மா, சரசுவதிக்குத் தனிச்சன்னதிகள்

பிரம்மா,சரஸ்வதிக்கு நித்தியபடி பூஜைகள்

தீர்த்தம் : கதம்பதீர்த்தம், கொள்ளிட ஆறு

மரம் : கதம்பமரம்

விமானம் : உத்தியோகவிமானம்

உத்தமர் கோயில் திருச்சி சேலம் நெடுஞ்சாலையில் கொள்ளிடம் டோல்கேட்அருகே உள்ளது. திருச்சிராப்பள்ளியிலிருந்து நகர பேருந்து வசதிகள் உள்ளன. கோயிலுக்கு அருகிலேயே உத்தமர் கோயில் ரயில்வே நிலையமும் உள்ளது. 108 திருப்பதிகளில் இதுவும் ஒன்று. பிரம்மா,திருமால்,சிவன் ஆகிய மும்முர்த்திகளும்எழுந்தருளி அருள்பாலிக்கும் தலம் இது. பிரம்மாவுக்கும், சரசுவதிக்கும் தனிசன்னதிகள் உள்ளது சிறப்பாகும். பிரம்மா குரு ஸ்தானத்தில் இருந்து பக்தர்களின்வேண்டுதலை ஏற்று குறைகளை நிவர்த்தி செய்து வருகிறார். வியாழக்கிழமை தோறும் பிரம்மாவுக்குச் சிறப்பான வழிபாடுகள் நடைபெறுகின்றன. பக்தர்கள் பிரம்மாவுக்கு அர்ச்சனை செய்யும்பொழுது தனது வேண்டுதலைக் கூறி அர்ச்சனைச் செய்கின்றனர். வேண்டுதல் நிறைவேறுவதால் வியாழக்கிழமை தோறும் மக்கள் கூட்டம் கோயிலுக்குவருவது அதிகரிக்து வருகிறது..

11 வாரங்கள் அர்ச்சனை செய்து தங்கள் கோரிக்கை நிறைவேறியவுடன் 12 வதுவாரம் தளிகை செய்து தங்கள் வேண்டுதல்களை நிறைவுச்செய்து செல்கிறார்கள். நேரில் வர இயலாதவர்கள் தங்கள் பெயர் நட்சத்திரம், ராசி, கோத்திரம் முழுமுகவரி ஆகியவற்றை எழுதி மணியார்டர் மூலம் உரிய தொகையைச் செலுத்தித் தபாலில் பிரசாதம் பெறலாம்.

| | |
|---|---|
| 11 வாரங்கள் கட்டளை அர்ச்சனை | ரூ. 55/- |
| அர்ச்சனைச் சீட்டு உள்பட தயிர்சாதம் தளிகை | ரூ. 46/- |
| சர்க்கரைப் பொங்கல் அல்லது புளியோதரை தளிகை | |
| அர்ச்சனை சீட்டு உள்பட | ரூ. 61/- |

ஜாதகத்தில் விஷ்ணு தோஷம் இருந்தால் புதன்கிழமைகளிலும், சிவன், மற்றும் குருதோஷம் இருந்தால் வியாழக்கிழமைகளிலும், நாகதோஷம், சுமங்கலி தோஷம் இருந்தால் வெள்ளிக்கிழமைகளிலும் பிரம்மாவிற்க்கு உகந்த ஆத்தி இலையில் அர்ச்சனை செய்து நலம் பெறலாம்.

முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு உத்தமர் திருக்கோயில்
பிட்சாண்டார் கோயில் அஞ்சல் 621216
லால்குடி வட்டம்
திருச்சிராப்பள்ளி மாவட்டம்
தொலைபேசி : 60466

# 1. தமிழகத்திருக்கோயில்கள்

திருக்கோயில்களால் சிறப்புற்று விளங்குவது தமிழ்நாடு. தெய்வ உணர்வை உண்டாக்கும் சிறப்பிடங்களாக ஆன்றோர்கள் அமைத்த ஆலயங்கள் விளங்குகின்றன என்றால் மிகையில்லை. உடலுக்கு உணவைத் தரும் நிலங்கள் அமைந்திருப்பது போல, உள்ளத்துக்கு ஆன்மாவுக்கு உணவாகிய பக்தி உணர்வுகளை உண்டாக்கும் வகையில் பல ஆலயங்கள் அமைந்திருக்கின்றன. திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும், பாங்கினொடு பல தளிகள் இல்லாத ஊரும் அவையெல்லாம் ஊரல்ல என்ற அப்பர் பெருமான் வாக்கிற்கிணங்க தமிழ்நாடு தெய்வமனம் கமழும் பல கோயில்களால் தனிச் சிறப்பினைப் பெறுகிறது.

பரம்பொருளாகிய இறைவன் உலகத்தில் உள்ள பல உயிர்களும் துன்பம் நீங்கி இன்பம் பெறும் வண்ணம் தன் அருவ நிலையிலிருந்து இறங்கி இப்பூவுலகில் ஆங்காங்குள்ள பல தலங்களில் உருவத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து பக்தியுடன் தன்னை வழிபடும் அடியவர்க்கு அருள் செய்கிறார். பரம்பொருளாகிய இறைவனுக்குப் பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம்,அர்ச்சை என்னும் ஐந்துவகை நிலைகள் உண்டு. அர்ச்சை என்பது விக்கிரக வடிவத்தில் எழுந்தருளும் நிலையாகும். அடியார்கள் வழிபடுவதற்கு எளிதாய் கோயிலில் உள்ள மூர்த்திகளாக விளங்கும் அர்ச்சை நிலையே சிறந்ததாகக் கூறுவர் சான்றோர்.

***செய்ய பரத்துவமாய் சீராய் வியூகமாய்***
***துய்ய விபவமாய்த் தோன்றியவற்றுள் எய்துமவர்க்கு***
***இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றால்***
***பன்னு தமிழ் மாறன் பயின்று.***

-(திருவாய்மொழி நூற்றந்தாதி)

கோயில்கள் வெறும் வழிபாட்டுத் தலங்களாக மட்டும் இல்லாமல் சமுதாயபணிகளும் செய்து வந்ததை வரலாற்றுச் சான்றுகள் எடுத்துரைக்கின்றன. கோயில்களில் ஊர் சபை கூடியதைப்பற்றியும், மருத்துவமனை, கல்லூரிகள், நூலகங்கள் இயங்கி வந்ததைப்பற்றியும் அறியமுடிகிறது. கோயில்களைச் சார்ந்தே இலக்கியம், இசை, நடனம், சிற்பம், ஓவியம் போன்ற கலைகளும் வளர்ச்சிப் பெற்றன. கோயில்களில் காணப்படும் கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டு வரலாற்றுக்கு முக்கிய ஆதாரமாக விளங்குகின்றன. கோயில்களில் நடைப்பெற்ற திருவிழாக்கள் மக்களிடையே ஒற்றுமையை

வளர்த்தன. எனவேதான் 'கோயில் விளங்கக்குடிவிளங்கும்' 'ஆலயம் தொழுவது சாலவும நன்று' போன்ற சான்றோர் வாக்குகள் தோன்றின எனலாம். ஆகவே நமது பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றைப்பிரதிபலிக்கும் கோவில்களைப் பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும்.

## 2. கோயிலும் இருப்பிடமும்

தமிழ்நாட்டில் உள்ள கோயில்களில் பல கோயில்கள் தனிச்சிறப்பு வாய்ந்தன. அவைகளுள் திருச்சிராப்பள்ளி வட்டத்தில் திருச்சி சேலம் நெடுஞ்சாலையில்கொள்ளிடம் ஆற்றுக்கரையில் அமைந்திருக்கும் அருள்மிகு உத்தமர் கோயில் மிகவும்சிறப்பு வாய்ந்த தலமாகும்.

பிரம்மா,திருமால்,சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் ஒருங்கே அமையப்பெற்றகோயில் உத்தமர்கோயில் ஆகும். திருமாலுக்குரிய 108 திருப்பதிகளில் இதுவும் ஒன்று. திருக்கரம்பனூர் என்று வழங்கப்படுகிறது. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் பெற்ற தலமாகும்.

### உத்தமர்

**பேரானைக் குறுங்குடியெம் பெருமானைத் திருத்தண்கால்**
**ஊரானைக் கரம்பனூ ருத்தமனைமுத்திலங்கு**
**காரார் திண்கடலேழு மலையேழிவ்வுலகேழுண்டும்**
**ஆராதென்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே**

- திருமங்கையாழ்வார்

**சிலமாதவம் செய்துந் தீவேள்வி வேட்டும்**
**பலமாநதியிற் படிந்து முலகிற்**
**பரம்பநூ ல் கற்றும் பயனில்லை நெஞ்சே**
**கரம்பனூர் உத்தமன் பேர் கல்**

***பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.***

இத்தலத்திற்கு வருவதற்கு திருச்சிராப்பள்ளி சத்திரம் பேருந்து நிலையத்திலிருந்து நகர பேருந்துகள் உள்ளன. கோயில் அருகே பேருந்துகள் நிற்கும். மற்றும் சமயபுரம் லால்குடி செல்லும் பேருந்துகளில் வருபவர்கள் கொள்ளிடம் டோல்கேட்டில் இறங்கி இத்தலத்திற்கு நடந்து வரலாம்.

## 3. தலத்தின் வேறுபெயர்கள்

இத்தலம் உத்தமர்கோயில் என்றும், திருக்கரம்பனூர், பிட்சான்டார்கோயில், நீபசேத்திரம், கதம்பவனம், திரிமூர்த்திகள் சேஷத்திரம், ஆதிமாபுரம் எனவும் அழைக்கப்படுகிறது. கதம்ப முனிவர்க்காகத் திருமால் தோன்றியதால் திருக்கரம்பனூர் என்றும், சிவபெருமான் பிட்சாடனமூர்த்தியாக இத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி இருப்பதால் பிட்சாண்டார்கோயில் பிச்சையூர் என்றும் அழைக்கப்படுகிறது. பிரம்மதேவனைத் திருமால் தனது நாபியில் வைத்துக்கொண்டு இத்தலத்தின் தேவதையாக அமர்ந்திருப்பதால் ஆதிமாபுரம் என்றும் பிரம்மபுரம் என்றும் அழைக்கப்படுகிறது. இத்தலத்தில் முற்காலத்தில் நீபமரங்கள் நிறைந்து வனமாக இருந்ததால் நீபவனம் (கதம்பவனம்) என்றும் பிரம்மா, திருமால், சிவன் ஆகிய மூவரும் ஒரே ஆலயத்தில் எழுந்தருளியிருப்பதால் திரிமூர்த்தி சேத்திரம் என்றும் பல்வேறு பெயர்களில் வழங்கப்படுகிறது.

## 4. மும்மூர்த்திகள் சிறப்பு

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலுக்குப் புருஷோத்தமர், உத்தமர் என்றும்,தாயாருக்குப் பூரணவல்லி என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். சிவபெருமான் பிட்சாடனமூர்த்தி என்றும் அம்பாள் வடிவுடைய நாயகி (சௌந்தரபார்வதி) என்றும் திருநாமங்கள் வழங்கப் பெறுகின்றன. பிரம்மா மற்றும் அவரது தேவியான சரசுவதியும் தனித்தனி சன்னதிகளில் காணலாம்.

புருஷோத்தமரான திருமாலும், திருமகளும் அழிவில்லாமல் சகல உயிர்களையும் காப்பாற்றி வருவதாலும் சகல குணங்களிலும் மேம்பட்டு விளங்குவதாலும் எம்பெருமானுக்கு உத்தமர் என்ற திருநாமம் பொருந்தியிருக்கிறது.

பிரம்மனின் ஐந்தாவதுத் தலையைக் கிள்ளிவிட்ட சிவபெருமான் அந்தத் தலையை தமது கையில் ஒட்டிகொண்டு நீங்காமல் இருக்கவே, பிட்சாடனர் பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி உத்தமர் கோயிலுக்கு வருகிறார். திருமாலாகிய புருசோத்தமர் லட்சுமியை நோக்க தாயாரும் பிட்சாடனரின் கபாலத்தில் பிச்சையிடுகிறார். அதுவரை நிரம்பாத ஓடு அன்று நிரம்பி சிவபெருமானின் தோஷம் நிவர்த்தி ஆகிறது. எனவே, பூரணவல்லி எனறு அழைக்கப்படுகிறாள்.

சிவ அபராதம் செய்துவிட்டுப் பூவுலகில் கோயில் இல்லை என்று சாபம் பெற்ற பிரம்மதேவனுக்கு இங்கு தனி சந்நிதி உள்ளது. பிரம்மா குருஸ்தானத்தில் இருந்து பக்தர்களின் குறைகளை நிவர்த்தி செய்து வருகிறார். வியாழன் தோறும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் பிரம்மனுக்கு அர்ச்சனை செய்து வழிபடுவது கண்கொள்ளாக் காட்சியாகும். வியாழன் தோறும் 11 வாரங்கள் தொடர்ந்து அர்ச்சனை செய்து தங்கள் கோரிக்கை நிறைவேறியவுடன், 12 வது வாரம் தளிகை செய்து வேண்டுதல்களை நிறைவு செய்து கொள்கிறார்கள்

ஜாதகத்தில் விஷ்ணுதோஷம் இருந்தால் புதன் கிழமையிலும் சிவன் மற்றும் குரு தோஷம் இருந்தால் வியாழக்கிழமையிலும், நாகதோஷம் சுமங்கலி தோஷம் இருந்தால் வெள்ளிக்கிழமையிலும் பிரம்மாவிற்கு உகந்த ஆத்தி இலையில் அர்ச்சனை செய்தால் ஏற்படும் நற்பயன்கள் உடனே தெரிகிறது. மனமும் மகிழ்ச்சி அடைகிறது.

## 5. தீர்த்தங்கள்

இக்கோயிலுக்குக் கிழக்கே கதம்பதீர்த்தமும், தெற்கில் அய்யன் வாய்க்காலும், கொள்ளிட ஆறும் தீர்த்தங்களாக உள்ளன. அவற்றிலிருந்து திருமஞ்சன நீர் கொண்டு வரப்படுகிறது. கோயிலின் தென்பிரகாரத்தில் ஒரு கிணறு உள்ளது. கோயிலுக்கு வடப்புறத்தில் பிரகலாத தீர்த்தமும், பத்மதீர்த்தமும், தெற்கில் பிரம்ம தீர்த்தமும் இருந்ததாகக் கூறப்படுகிறது. கோயிலைச் சுற்றி சிறிய வாய்க்கால்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. இக்கோயில் நீர்வளம் பொருந்திய இடத்தில் அமைந்திருக்கிறது.

## 6. தலப்பெருமை

பிரம்மா, திருமால், சிவன் ஆகிய திருமூர்த்திகளும் ஒருங்கே அமையப் பெற்ற கோயில் இது. இக்கோயிலை வழி படுவோர் வலம் வரும்பொழுது மூன்று சந்நிதிகளையும் சேர்த்து வலம் வரவேண்டும் என்ற அமைப்பில் கோயில் அமைந்துள்ளது சிறப்பானதாகும்.
படைத்தல், காத்தல், அழித்தல், ஆகிய செயல்களுக்காக பிரம்மா, திருமால், சிவபெருமான் ஆகியோரைக் கூறுவார்கள் தமிழ்நாட்டில் முதன்முதலாகக் கற்களால் கோயில் கட்டும் பொழுது பிரம்மா திருமால் சிவன் ஆகிய மூவருக்குமாக கோயில் எடுத்தார்கள். விழுப்புரம் அருகில் உள்ள மண்டகப்பட்டு என்னுமிடத்தில் திரிமூர்த்திகளுக்காக குகைக் கோயில் கட்டப்பட்டதாக அக்கோயிலில் உள்ள மகேந்திரவர்மப் பல்லவர் கால கல்வெட்டுகள் கூறுகின்றது.

இது போன்று பல குடைவரைக் கோயில்களிலும் பிரம்மா, திருமால் சிவன் ஆகியோரது திருஉருவங்களைக் காணலாம். சோழர் காலக் கோயில்களில் கருவறைச் சுவரில் தேவகோட்டங்களில் திருமால், பிரம்மா ஆகியோரது திருஉருவங்களை வைப்பது வழக்கமாக இருந்திருக்கிறது. இது மட்டுமல்லாமல் சிவபெருமான் லிங்கவடிவில் அமைந்திருக்கும்பொழுது லிங்கத்தின் சதுரவடிவமான கீழ்ப்பகுதி பிரம்மபாகம் எனவும், எட்டுப்படையான இடைப்பகுதி விஷ்ணுபாகம் எனவும், திரண்டதான தலைப்பகுதி ருத்ரபாகம் எனவும் அழைக்கப்படுகிறது. இவை சிருஷ்டி, ஸ்திதி, சம்காரம் என்ற முத்தொழிலையும் குறிக்கும். லிங்க வடிவே மூவரும் இணைந்த தன்மையை எடுத்துகாட்டும் வகையில் அமைந்துள்ளது. சிலக்கோயில்களில் திருமாலும், சிவபெருமானும் இணைந்த அரிஅரன் எனப்படும் சிற்பத் திருமேனிகளையும் காணலாம். இவையெல்லாம் இறைவன் ஒன்றே என்ற எண்ணத்தை மக்களிடம் தோற்றுவிக்கும் நோக்கத்தில் தொன்றுதொட்டு அமைக்கப்பட்டது எனலாம்.

சிவபெருமான் தன்னை வழிபடும் அன்பர்களுக்கு அருள்புரியும் பொருட்டு அவ்வப்பொழுது மேற்கொண்ட திருவுருவங்களில் ஒன்று பிட்சாடன மூர்த்தி ஆகும்.

அடியிற்றொடுத்த பாதுகையும்
அசைந்த நடையும் இசை மிடறும்
வடியிற் சிறப்ப நடந்தருளி
மூழை ஏந்தி மருங்கணைந்த
தொடியிற்பொலி தோள் முனிமகளிர்
சுரமங்கையரை மயல்பூட்டிப்
படியிட்டெழுதாப் பேரழகாற்
பலிதேர் பகவன் திருஉருவம்

என்று சிவஞான சுவாமிகள் போற்றுகின்றார்.

'அருமையில் எளிய அழகே போற்றி' என்றார் மாணிக்கவாசகர் பெருமான். பிட்சாடனப்பெருமான் நம்மிடமிருந்து பொன் பொருளை கேட்கவில்லை. நம்முடைய அன்பையும், நன்றியையுமே அவர் பெற விரும்புகிறார். நம்முடைய குற்றங்களையெல்லாம் தாம் பெற்றுக்கொண்டு தம்முடைய குணங்களையெல்லாம் இறைவன் நமக்குத் தந்தருள விரும்பும் திருக்கோலமே பிட்சாடன மூர்த்தம் என்று போற்றப்படுகிறது. இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் பிட்சாடனர் என்றே அழைக்கப்படுகிறார்.

# 7. திருக்கோயில் அமைப்பு

கோயில் கொள்ளிடம் ஆற்றின் கரையில் அமைந்திருப்பதால் கோயிலைச் சுற்றி தென்னை மரங்களும், வயல்களும் சூழ்ந்து எழிலாக விளங்குகிறது.

நுழைவு வாயிலின் வழியே உள்ளே செல்கிறோம். நுழைவு வாயிலின் எதிரிலேமுதலில் நாம் காணுவது புருஷோத்தமர் கோயிலாகும். பலிபீடம், கொடிமரம், பெரிய திருவடியான கருடன் ஆகியோரை வழிபட்டுச் செல்கிறோம். சன்னதியின் வாயிலில் இரு பெரிய துவாரபாலகர்கள் காட்சித் தருகின்றனர். கருவறையில் மூலவர் அரவின் மீது சயனக்கோலத்தில் காட்சித் தருகிறார். மார்பில் லட்சுமியும், வயிற்றுப்பகுதிக்கு மேலே பிரம்மாவும் காட்சி தருகிறார்கள். மூலவருக்கு முன்பாக புருஷோத்தமர் அழகிய வடிவுடன் ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் உற்சவத் திருமேனியாக எழுந்தருளி பக்தர்களுக்குச் சேவை சாதிக்கிறார்.

கருவறைக்கு முன்னர் இடைநாழியில் சுவரில் கதம்ப மகரிஷி எனப்படும் ஒரு உருவம் காணப்படுகிறது. இவருக்காகத்தான் திருமால் காட்சி அளித்ததாக புராண வரலாறு கூறுகிறது.

சன்னதியின் இடப்புறம் லட்சுமி சன்னதி காணப்படுகிறது. துவாரபாலகர் அருகே ஆஞ்சநேயர் அஞ்சலி செய்கின்ற கோலத்துடன் காட்சித் தருகிறார். ஆஞ்சநேயர் ஒரு காலை சற்று முன்னே வைத்திருக்கிறார். வாலில் ஒரு சிறிய மணி கட்டப்பட்டுத் தலைக்கு மேலே வளைந்து காணப்படுகிறது. ஜெயவீர ஆஞ்சநேயர் என அழைக்கப்படுகின்றார். வேண்டியவர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் சிறப்பு உடையவராக போற்றி வழிபடப் பெறுகின்றார்.

தெற்குத் திருச்சுற்றில் கிழக்கு நோக்கி பூரணவல்லித் தாயார் சன்னதி உள்ளது. தன் மேலிருகைகளில் தாமரை மலரை ஏந்தி மற்றும் இருகைகளில் அபய, வரத, முத்திரைத் தாங்கி அமர்ந்த கோலத்தில் தாயார் அருள் பாலிக்கும் கோலம் மிகவும் அழகானதாகும்.

பெருமாள் கோயில் விமானம் உத்தியோக விமானம் என அழைக்கப்படுகிறது. செவ்வக வடிவில் அமைந்துள்ள இவ்விமானத்தில் கதை சிற்பங்கள் அழகுச்செய்கின்றன. கிழக்கில் திருமால் ஸ்ரீதேவி பூதேவியுடன் அமர்ந்தகோலத்திலும் தெற்கில் நரசிம்மமூர்த்தி, மேற்கில் லட்சுமி நரசிம்மர், வடக்கில் திருமால் வைகுண்டவாசனாக அமர்ந்த கோலத்திலும் சுதை சிற்பங்களைக் காணலாம்.

திருமால் கோயிலுக்குப் பின்புறம் சிவன் கோயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. சிவன்கோயில் கருவறை ,முன் மண்டபம் என்ற அமைப்புகளுடன் காட்சி தருகிறது. லிங்கவடிவில் இறைவன் பிட்சாடனர் என்ற திருநாமத்துடன் காட்சி தருகிறார். கருவறைச்சுவரில் தேவக் கோட்டங்களில் பிள்ளையார், பிட்சாடனமூர்த்தி, தட்சிணாமூர்த்தி, பிரம்மா, துர்க்கை ஆகிய திருமேனிகளைக் காணலாம். கருவறைச் சோழர் காலத்தில் கட்டப்பட்டதாகும். அதிட்டானப்பகுதியில் சிவபெருமானின் புராணக்கதை நிகழ்ச்சிகள் சிறிய பலகைச் சிற்பங்களாக செதுக்கப்பட்டுள்ளன.

சிவபெருமான் கோயிலின் முன் மண்டபத்தில் தெற்கு நோக்கி அம்மன் சன்னதி உள்ளது . தேவி வடிவுடைய நாயகி என்ற பெயருடன், தன் நான்கு கரங்களில் இரண்டில் தாமரை மலரை ஏந்தியும் மற்ற கரங்களில் அபய, வரத முத்திரை தாங்கியும் நின்ற கோலத்தில் காட்சி தரும் அன்னையின் அழகே தனி தான். சௌந்தரபார்வதி என்றும் அழைக்கப்பெறுகிறாள். கருவறையின் வெளிச்சுவரின்'சிவநாமர்த்யம்'சிவசம்போ மகாதேவ' என்று கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

மேலும் முன் மண்டபத்தில் மகாலிங்கம், கணபதி, பிரம்மா, தண்டாயுதபாணி ஆகியோர் வழிபடப் பெறுகின்றனர். கருவறையின் நுழைவு வாயிலில் சூரியன், சந்திரன் ஆகியோர் திருஉருவங்களை அமைத்திருக்கின்றனர். பிட்சாடனர் என்ற பெயருக்கு ஏற்ப தென்புற தேவ கோட்டத்தில் காணப்படும் பிட்சாடனர் திருவுருவம் மிகவும் அழகானது. சோழர் கால கலைச் சிற்ப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. தென்புறச் சுவரிலியே தேவக்கோட்டத்தில் காணப்படும் குருபகவானான தட்சிணாமூர்த்திக்கும் வியாழன் தோறும் சிறப்பான வழிபாடுகள் நடைப்பெறுகின்றன. ஞானம், இசை, கூத்து இவற்றில் பிறப்பிடமும் ஆசிரியனும் சிவபெருமானே என்று கூறப்படுகிறது. தட்சிணம் என்றால் ஞானம் என்பதாகும். தட்சிணாமூர்த்தியாக அமர்ந்து யோகம், இசை முதலான பிறகலைகளைப் போதிக்கும் குருவாக விளங்குகிறார்.

மேற்குத் திருச்சுற்றில் லட்சுமி நாராயணன் மற்றும் இராமர் சன்னதியும், நந்தவனமும் உள்ளன. வடமேற்கு மூலையில் வேணுகோபாலர் சன்னதி உள்ளது .வடக்குத் திருச்சுற்றில் தசரதலிங்கம் என்ற தனிச் சன்னதியில் லிங்க வடிவில் இறைவன் மற்றும் அய்யனார், சண்டிகேசுவரர் சிற்பங்கள் காணப்படுகின்றன.

இத் திருச்சுற்றில் வரதராஜப் பெருமாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் சன்னதிகள் அடுத்தடுத்து உள்ளன. மேலும் பிரம்மாவிற்கும், சரசுவதிக்கும் தனித்தனி சன்னதிகள் தெற்கு நோக்கி அமைந்துள்ளன.

பிரம்மா நான்கு முகங்களுடன் மேலிருகரங்களில் அட்சமாலை, குண்டிகை ஏந்தியும், கீழிரு கரங்களை யோக நிலையில் வைத்து அமர்ந்த கோலத்தில் காணலாம்.பிரம்மாவுக்கு தனி சன்னதி ஏற்படுத்தப்பட்டு சிறப்பாக வழிபாடு நடைபெறுவது இத்தலத்திலேதான். பிரம்மா தேவ குருவாகக் கருதப்படுவதால் தங்கள் விருப்பங்கள் நிறைவேற வியாழக்கிழமை தோறும் மக்கள் திரளாக வந்து போற்றி வழிபட்டு பேறு அடைகின்றனர். தாம் வேண்டியதையும் கூறி அர்ச்சனை செய்கின்றனர். மக்களின் வேண்டுதல் நிறைவேறுவதால் மேலும் மேலும் வியாழக்கிழமை தோறும் கூட்டம் அதிகமாவது தொடர்கிறது.

பிரம்மாவை அடுத்து கலைமகள் சன்னதி உள்ளது. அட்சமாலையும், ஓலைச் சுவடியும் ஏந்தி, அபய, வரத முத்திரை தாங்கி சுகாசன கோலத்தில் அமர்ந்து கலைமகள் காட்சி தருகிறார். கல்வி சிறப்பாக வளர வேண்டி பலர் வியாழன் தோறும் அர்ச்சனை செய்கின்றனர். ஞான சரசுவதி என்றும் போற்றுகின்றனர்.

## 8. கல்வெட்டுகள்

இக்கோயிலின் கோபுரம், மற்றும் சிவன் கோயிலின் சுவர்களில் கல்வெட்டுக்கள்காணப்படுகின்றன.

கோபுரத்தில் காணப்படும் 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டில் இராமநுஜர்என்ற பெயர் காணப்படுகிறது. கிராமம் ஒன்று இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டசெய்தியும் குறிக்கப்பட்டிருக்கிறது.

பிட்சாடனர் கோயிலில் உள்ள, பாண்டிய மன்னன் திரிபுவன சக்கரவர்திகள் குலசேகர பாண்டியன் கல்வெட்டு மன்னனின் 10வது ஆட்சி ஆண்டைச் சார்ந்தது. இக்கோயில் உள்ள பகுதி இராஜராஜவளநாடு எனக் குறிக்கப்படுகிறது. இப்பகுதியில் உள்ள கோயில்களுக்கு நிலமளித்த செய்தி கூறப்படுகிறது.

சோழ மன்னன் முதலாம் இராசாதிராசன் கல்வெட்டும் இங்கே உள்ளது. இக்கல்வெட்டில் இக்கோயில் திருக்கரம்பந்துறை, எனவும் இறைவன் திருக்கரம்பந்துறை மகாதேவர், திருக்கரம்பந்துறை ஆழ்வார் என்றும் குறிக்கப்படுவது சிறப்பாகும். இக்கோயிலுக்கு, விற்குடி என்னும் ஊரில், குணசீல மங்கலத்தைச் சேர்ந்த ஒருவனால் நிலம் ஸ்ரீரங்கநாதசுவாமி முன்னிலையில் தானம் அளிக்கப்பட்ட செய்தி மற்றொருகல்வெட்டினால் அறிய முடிகிறது. இக் கோயில் எழுந்தருளியிருக்கும்

பெருமாள் 'அழகிய உத்தமர்' என்று குறிப்பிடப்படுவது சிறப்பாகும்.

## 9. திருக்கோயில் விழாக்கள்

நான்கு கால பூஜை, இது தவிர காலையில் விஷ்ணு சந்நிதியில் விஸ்வரூப தரிசனமும்கோசேவையும் பஞ்சாங்கம் கூறுதலும் நடந்து வருகின்றன.

புருஷோத்தமர் கோயிலில் சித்திரை மாதம் சித்ரா பௌர்ணமி தினத்தை இறுதியாகக் கொண்டு பிரம்மோத்சவமும், ஆனி மாதம் ஜேஷ்டாபிஷேகம், ஆவணி பவித்ரோற்சவம் கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகை தீபத்திற்குச் சிவனும், பெருமாளும் சேர்ந்தாற்போல் புறப்பாடும், மாசி மாதத்தில் பெருமாள் கொள்ளிடத்திற்குத் தீர்த்தவாரிக்கு எழுந்தருளுதல், சிவன் கோயிலில் வைகாசி விசாகத்தில் பிரம்மோற்சவமும், ஆனித் திருமஞ்சனத்திலும் திருவாதிரை நாளிலும் நடராஜர் புறப்பாடும், தைப்பூசத்தன்று பிட்சாடனர் கொள்ளிட ஆற்றுக்குத் தீர்த்தவாரிக்கு எழுந்தருளுவதும் நடைபெறுகிறது.

## 10. பிற்கால வரலாறு

பிட்சாண்டர் கோயிலிலுள்ள மதில்களால் சூழப்பட்ட ஆலயமானது கி.பி. 1751 -52ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களுக்கும், பிரஞ்சுக்காரர்களுக்கும் நடந்த போரில் முக்கிய தளமாக இருந்தது. 1751ம் ஆண்டில் காப்டன் ஜின்ஜின் திருச்சிராப்பள்ளியில் ஒய்வு எடுத்துக்கொள்ளுமுன் இக் கோயில் தற்காலிகமாக உபயோகித்துக்கொள்ளப்பட்டது. பின்னர் விரோதியினால் அரணாக்கப்பட்டது.

1752ம் வருடம் மே மாதம் 16ம் தேதி மாலை 4 மணிக்குக் கிளைவ்வினால் ஸ்ரீரங்கம்தீவில் தங்கியிருந்த பிரஞ்சுப்படை பிட்சாண்டார் கோயிலில் தங்கியிருந்த படைக்குஉதவி செய்ய முடியாமல் தடுப்பதற்காக ஏற்பாடுகள் செய்து முடியுந்தருணத்தில் தீவுகளில் தங்கியிருந்த சந்தா சாகிப் முகாம்களை ஆற்றங்கரையில் பீரங்கிகளை மறைவில் வைத்து குறுக்கு வழியாகத் தாக்கினான். பிட்சாண்டார் கோயிலுக்கு 200 கெஜத்திற்கு வடக்கிலுள்ள ஒரு கிராமத்தில் பீரங்கிகளை வைத்துக் கொண்டுபிட்சாண்டார் கோயிலில் உள்ள படைகளைத் தாக்கினான். இதனை எதிர்பார்க்காதபிரஞ்சு படையினர் தைரியம் இழந்து சரணடைந்தார்கள்.

மீண்டும் 1759-60 ஆண்டில் நடைபெற்ற போரிலும் இக்கோயில் தாக்கப்பட்டது என்பது திருச்சிராப்பள்ளி ஆவன வரலாற்றில் குறிக்கப்படுகிறது. அண்மைக்கால வரலாற்றிலும் இக்கோயில் முக்கிய இடம் பெற்றிருக்கிறது என்பதை மேற்கண்ட

செய்தியினால் அறிய முடிகிறது.

## 11. புராண வரலாறுகள்.

இத்தலத்தின் பெருமைகளைக் குறித்துப் பிரம்மாண்ட மகா புராணத்தில் பலவரலாறுகள் சொல்லப்படுகின்றன. அவைகளுள் சில சுருக்கமாகக் கூறப்படுகிறது.

(1) கதம்ப வன வரலாறு

முன் பிரளய காலத்தில் உலகம் முழுமையும் உருத்திர மூர்த்தியிடம் ஒடுங்கியது. அப்பொழுது நித்தியமாகிய வேதங்கள் தங்களுக்கு இருப்பிடமில்லாதபடியால் சோமேசக் கடவுளிடம் சரணாக வந்தனவென்றும் அப்பொழுது அக்கடவுள் கரும பூமியாக்கிய பூலோகத்தில் அவதரிக்கப் போவதாகவும், அங்கு வேதங்கள் கதம்ப மரங்களாகவும், ஆகமங்கள் புஷ்பங்களாகவும், இதிகாசங்கள் பழுருபங்களாகவும், புராணம் முதலியன நானாவர்ணங்களோடு கூடிய பறவைகளாகவும் விளங்கித் தமக்குக் குளிர்ந்த மனோகரமான நிழலைக் கொடுத்துக் கொண்டிருக்குமாறு கட்டளையிட்டனர். வேதாகமம் முதலியன அவ்வாறே வந்து கதம்ப மரங்களாகத் தோன்றினமையின் இதற்குக் கதம்ப வனம் என்ற பெயர் உண்டாகிறது.

(2) பிரமன் வழிபட்டது

திருமாலின் நாபிக் கமலத்தில் தோன்றிய பிரமன் தன் பிதாவின் கட்டளைப்படி, பகவானின் கல்யாண குணங்களை எல்லோருக்கும் எடுத்துச் சொல்லி வந்ததுடன்பகவானைத் தனது சத்திய லோகத்தில் வைத்துப் பூஜை செய்து வந்தார். இவ்விதம் பூஜித்து வருகையில் பிரமனின் பூஜையைச் சோதிக்க விரும்பிய பகவான் இத்தலத்துக்கு வந்து கதம்பமரம் உருக்கொண்டு இருந்தார். பிரமன் பகவானைக்காணாமல் தேடிக் கொண்டு வரவே, பகவான் கதம்ப மரத்தில் ஐக்கியமாயிருப்பதைக் கண்டு தமது கமண்டல தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்ய அத்தீர்த்தம் ஒரு குளமாக நின்றது. அங்கு பிரமதேவர் துவாதசாக்ஷரத்தினால் பகவானை ஆராதித்து சிருஷ்டி சாமர்த்தியத்தைப் பெற்றார்.

பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்ட அத்தீர்த்தக் கரையில் கதம்ப முனிவர் இறைவனை அடைய வேண்டி, தம் இந்திரியங்களை அடக்கி கடுந்தவம் புரிந்து வந்தனர். இறைவனும் அவருடைய தவத்திற்கு இரங்கி காட்சியளித்து, முனிவரையும் அவ்விடத்திலேயே இருந்து கொண்டு தம்மை நித்தியபூஜை செய்யும்படி அருளினர். இதற்கிணங்க கதம்ப முனிவரும்

புருஷோத்தமர் முன்னிலையில் எழுந்தருளியிருக்கிறார். கதம்ப முனிவர் மேற்கூறிய குளக்கரையில் தவம் செய்தபடியால் அக்குளத்திற்குக் கதம்ப புஷ்கரணி எனப் பெயர் வழங்கலாயிற்று.

### (3) பெருமானும் பிரமகபாலமும்

சிவபெருமான் பிரம்ம தேவனுடைய தலையைக் கிள்ளியபொழுது, பிரம்மஹத்தி தோஷத்தால் கையில் அக்கபாலம் ஒட்டிக் கொள்ள அதன் பரிகாரத்தின் பொருட்டு பிரம்ம கபாலத்துடன் தீர்த்தயாத்திரை செய்ய வேண்டித் தேசங்கள் தோறும் சென்றும் அவரது கையிலுள்ள கபாலம் நிறையப் பிக்ஷை கிடைக்காமல் எப்பொழுதும் குறைவாகவே காணப்பட்டதால் மனக் குறையோடு சுற்றிக் கொண்டு, இக்கதம்ப தீர்த்த க்ஷேத்திரத்திற்கு வந்தபொழுது மிக்க கருணை வாய்ந்த திருமால் திருத்தேவியாரைக் கடாக்ஷித்தருள அவ்வம்மையார் அருளால் அக்கபாலம் நிறையப் பெற்றது. பின்னும் சிவபெருமான், தக்ஷப்ரஜாபதியை யக்ஞதீக்ஷையின் பொழுது கொன்றதனால் தனக்கு ஏற்பட்ட பிரம்மஹத்தி தோஷமும்,இந்த க்ஷேத்திரத்தில் நீங்கப் பெற்று இவ்விடத்திலேயே வீற்றிருக்கின்றனர்.

### (4) ஜனகரது யாகம் முடிவுற்றது

முன்னொரு காலத்தில் ஜனக மகாராஜர் தாம் தீர்த்த யாத்திரை செய்வதற்காக அரசபதவியை மந்திரிகளிடம் ஒப்புவித்துவிட்டு இக் கதம்ப தீர்த்தத்தை அடைந்தனர். அவ்விடம் தம் ஆசிரியர் கௌதமர் சொற்படி காசிபர் முதலிய ரிஷிகளை ரித்விக்காகச் செய்து கொண்டு யாகம் செய்யத் துவங்கினர். அந்த யாகத்தில் நாயொன்று புகுந்து அசுத்தம் செய்துவிட்டது. அதையறியாமல் அவர் யாகத்தைப் பூர்த்திச் செய்யத் தொடங்கினர். ரிஷிகளுக்கு மந்திரங்களின் பிரயோகங்கள் ஒன்றுமே தோன்றவில்லை. அங்குள்ள அனைவருக்கும் யாகம் தடைபட்டதைக் குறித்துப் பெரிய கலக்கம் ஏற்பட்டது. ஜனகரும் மனம் கலங்கினார். அனைவரும் பகவானைத் தியானஞ் செய்தனர். அவ்வமயம் ஒரு முனிவர் தம் சிஷ்யர்களுக்கு வேதாத்தியனஞ் செய்து வைத்துக் கொண்டு ஜனகரைப் பார்த்து, "ராஜரிஷியே நீவீர் இக்கதம்ப விருக்ஷஷத்தை உபாஸித்தால் உமது இக்குறை தீரும்."என்று கூறினார்.அவ்வாறே ஜனகரும் கதம்ப விருவஷத்தைத் துதி செய்ய அம்மரத்திலிருந்து, "அரசனே, நீங்கள் நாயால் அசுத்தம் செய்யப்பட்ட ஹோம திரவியங்களைக் கொண்டு ஹோமம் செய்ததால் உங்கள் புத்திக்குக் கலக்கம் உண்டாயிற்று. ஹோம திரவியங்களைப் புதிதாகத் தயாரித்து ஹோமம் செய்தால் புத்திக்குத் தெளிவ ஏற்படும்", என்ற அசரீரி உண்டாயிற்று. அதன்படியே புதிய திரவியங்களைச் சேகரித்து ஹோமம் செய்யத் தொடங்குகையில் நல்ல நினைவு ஏற்பட அவர்கள் யாகத்தைப் பூர்த்தி

செய்தனர். உடனே ஜனகர் அந்த ரிஷி சிரேஷ்டரை வணங்கி தேவரீர் யாவர்? எனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று வேண்டினர். அது கேட்டு அம்முனிவர் அக்கதம்ப விருக்ஷத்தையே பூஜித்தால் எல்லாம் புலப்படுமெனச் சொல்லி மறைந்தார். அவ்வண்ணமே கதம்ப விருக்ஷத்தைப் பூஜித்துத் துதி செய்ய வேதத்தின் உருவாகிய அவ்விருக்ஷத்தில் விராட் புருஷனாகிய பகவான் தமது புருஷோத்தம வடிவத்தை வெளிப்படுத்தி சேஷபர்யங்கத்தில் சயனம் பூண்டு உந்தித்தாமரை மலரில் நான்முகன் வீற்றிருக்க, பிக்ஷாடன உருவத்தோடு சிவபெருமான் பக்கத்திலிருக்கத் தோன்றிய வண்ணம் காட்சியளித்தார். ஜனகரும் மற்ற மகரிஷிகளும் திரிமூர்த்திகளையும் பூஜித்துத் துதி செய்தனர். ஜனக மகாராஜர் உடனே மும்மூர்த்திகளுக்கும் ஆலயங்கட்டுவித்து விக்கிரகங்களையும் பிரதிஷ்டை செய்து வைத்தார்.

### (5) கருடன் வழிபட்டது

ஆதிசேஷசயனனாகிய பகவான் இங்கு கதம்ப விருக்ஷமாக மாறியிருந்தபொழுது எப்போதும் பகவானுடைய பாதாரவிந்தத்தின் சேவையில் ஈடுபட்டு வந்த கருடன் பகவானைக் காணாது மிகவும் வருந்திப் . பல இடங்களிலும் திரிந்து கடைசியாக இவ்விடத்தில் பகவானைத் தரிசித்து வழிபடப் பெருமானும் கருடனைத் தம்முன்னே எப்போதும் தங்கியிருக்கும்படி கட்டளையிட கருடனும் பகவானுடைய அழகிய கோலங்களைப் பார்த்து தோத்திரம் செய்த வண்ணம் தங்கியிருக்கிறார். இதற்கு நிதர்சனமாக இக்கோயில் வைகானச ஆக விதிப்படி அமைந்திருப்பதால் கருடன்எப்போதும் பகவானுக்கு முன்னே தங்கியிருக்கிறார். கருடனுக்குப் பெரிய திருவடி என்ற பெயரும் வழங்குகின்றது. பிரம்மோற்சவத்தில் கருடக் கொடி ஏற்றப்படுகிறது.

### (6) சத்கீர்த்திவர்த்தனன் வழிபட்டது

சத்கீர்த்திவர்த்தனன் என்ற அரசன் மகப்பேறில்லாத குறையை நீக்க இவ்விடத்தில் தவம் செய்து, புத்திரனை அடைந்த சந்தோஷத்தினால், ஐந்து கலசங்களுடைய உத்தியோக விமானத்தையும், மண்டபங்களையும், பிராகாரங்களையும் அமைத்து, பூஸ்திதிகளையும் வைத்துச் சித்திரைப் பூர்ணிமையில் இரதோற்சவத்தையும் ஏற்பாடு செய்து நெடுங்காலம் இத்தலத்தில் வசித்து மோக்ஷமடைந்தான்.

இப்பொழுதும் ஸ்ரீரங்கநாதர் மாசி திருப்பள்ளியோடம் 5-ம் திருநாள் அன்று இவ்வாலயத்தில் உபயம் கண்டருளி கதம்ப புஷ்கரணியில் தீர்த்தம் சாதிக்கின்றனர். திருமங்கையாழ்வாரும், இந்த க்ஷேத்திரத்தில் வாசஞ் செய்து கொண்டு ஸ்ரீரங்கநாதருக்கு விமானம், கோபுரம், பிராகாரங்கள் முதலிய திருப்பணிகள் செய்ததாகவும் தெரிகிறது. இதற்கு அறிகுறியாகக் கதம்ப புஷ்கரணிக்கு வடபாகத்தில் நன்செய் நிலமும், அதையடுத்த

தோப்பும், மண்டபமும் ஆழ்வார் தங்கியிருந்ததால் "ஆழ்வார் பட்டவர்த்தி" என்ற பெயருடன் இன்றும் வழங்குகின்றன. இவை முதலான பல ஐதிகங்கள் இத்தலத்தில் நிகழ்ந்தன எனப் புராணம் கூறும்.

(7) பிக்ஷாடனர் வரலாறு

தாருக வனத்திலுள்ள முனிவர்கள் சிவபக்தியில்லாமல் கர்மத்தாலேயே யாவற்றையும் அடையலாம் என்று எண்ணியிருந்தனர். அவர்களுக்கு நல்லுணர்வு உண்டாக்கக்கருதிப் பெருமான் அழகிய கோலத்துடன் கண்டவர்கள் எல்லோரையும் வசீகரிக்கும் தோற்றத்துடன் பலியேற்கும் முறையில் பிரம்ம கபாலம் கைக்கொண்டு முனிவர்களிடம் சென்றான். தங்களிடம் வந்த பெருமானைக் கடவுள் என்றறியாமல் பெருமானைக் கொல்லக் கருதி ஓர் யாகஞ் செய்து அதிலிருந்து பல உயிர்பொருள்களை வரச் செய்து, பெருமானிடம் ஏவிக் கொல்லப் பார்த்தார்கள். பெருமான் தனது பேராற்றலால் அவைகளையெல்லாம் அடக்கியாண்டான். அந்த வேள்வியிலிருந்து படபா என்னும் நெருப்பு வந்தது. பெருமான் அதைத் தாங்கினான் .பிறகு புலி வந்தது. புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்து கொண்டான். மானும் மழுவும் வந்தன. அவைகளையும் ஏந்திக் கொண்டான். பிறகு பாம்புகள் தோன்றின. அவைகளை ஆபரணங்களாக அணிந்தான். பிறகு மந்திரங்களை ஏவினார்கள். அவைகளை உடுக்கை வடிவத்தில் தாங்கினான். முனிவர்கள் தங்கள் செயல் பயன்படாததைக் கண்டு பெருமானிடம் பக்தி பூண்டு வழிபடலானார்கள். பெருமானும் அவர்களுக்கு ஞான உபதேசம் செய்தான்.இவ்வடிவத்தில் பெருமான் மானுக்குப் புல் அளிப்பதை ஆன்மாவுக்கு ஞானோபதேசம் செய்யும் ஞான முத்திரையாகக் கூறுவர்.

***"பிறங்கிய சீர்ப்பிரமன் தன் தலைகையேந்திப்***
***பிச்சை யேற்றுண்டுழன்று நின்றநாளோ"***
***"அலங்கற் சடைதாழ ஐயமேற்று***
***அரவம் அரையார்க்க வல்லார் போலும்"***

***- அப்பர்***

## 12. திருப்பணி

இந்தியாவில் எந்த ஆலயத்திலும் இல்லாத வகையில் ஒரே நாளில் ஒரே நேரத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மும்மூர்த்திகளுக்கும், முப்பெரும் தேவிகளுக்கும் குடமுழக்கு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் சுவாமிகள், ஸ்ரீ அகோல பீடமடம் ஜீயர், ஸ்ரீமத் அழகிய சிங்கர் சுவாமிகள், திருவரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள்

ஆகியோரின் அருளாசியுடன் நாற்பது ஆண்டுகளுக்கு பின்பு 14-9-1988 (விபவ ஆண்டு ஆவணி திங்கள் 29ம் நாள்) புதன்கிழமை காலை திருதியை திதி, சித்ரா நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 6-00 மணிக்குமேல் 7-30 மணிக்குள் கன்யாலக்னத்தில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது. திரு. எம். காளிதாஸ்,தலைவர், நிர்வாக இயக்குநர், காவேரி இன்ஜீனிரிங் (லிட்) திருச்சி திரு. பி.ஆர்.என்.சேதுராமன், பி.ஏ., திரு. வி. திருமலை அய்யங்கார் மற்றும் ஷை ஆலய பேஷ்கார் திரு.சு. ஸ்ரீமான் நடராஜன் ஆகியோரும் சிறப்பாக செய்திருந்தார்கள்.

### 13. நிர்வாகம்

இத்திருக்கோயில் திருச்சி லால்குடி வட்டம் தேவஸ்தான கமிட்டியின் மேற்பார்வையிலிருந்து வந்தது. பிறகு 28.11.1937 தேதியுள்ள 3138ம் எண் உத்திரவில் ஏற்படுத்தப்பட்ட ஸ்கீம் திட்டப்படி 1938ம் வருஷம் பிப்ரவரி மாதம் முதல் சென்னை அறநிலையப் பாதுகாப்பு இலாக்காவின் நேர் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. அறநிலையத்தாரால் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரியும், அறங்காவலர்களும் இருந்து வருகிறார்கள்.

இத்திருக்கோயிலில் திருமணங்கள் நடத்துவது விசேஷமாகக் கருதப்படுகிறது ஆண்டுதோறும் 500க்கும் மேற்பட்ட திருமணங்கள் நடைபெறுகின்றன. பொதுமக்களின் நன்மையைக் கருதி திருமண மண்டபம் கட்டணம் ரூ.1000/- வசூலிக்கப்படுகிறது. இது தவிர ஏழை எளியவர்கென ரூ.50/- பதிவு செய்தும் திருமணங்கள் நடைபெற்று வருகின்றது. திருமணம் செய்ய விரும்புவோர்கள் அந்தந்த கிராம நிர்வாக அதிகாரியிடம் மணமகனுக்கு இதுதான் முதல் திருமணம் என்றும், மணமகனுக்கு வயது 21ம் என்றும், மணமகளுக்கு 19 வயது பூர்த்தியாகிவிட்டது என்றும் சான்று பெற்று ஆலயத்திடம் கொடுக்க வேண்டும்.

**மும்மூர்த்திகளும் தன் தேவியருடன் எழுந்தருளியிருக்கும் இத் திருக்கோயில் தனிச்சிறப்புடன் விளங்குகிறது. உத்தமமான வாழ்க்கை அமைய உத்தமரைத் தரிசிக்க வாருங்கள். மகிழ்ச்சி அடையுங்கள்.**

## 14. கோயில் பூஜைகால விபரம்

விஸ்வரூபதரிசனம் காலை 6-00மணி

காலை பூஜை 8-00மணி

உச்சிக்கால பூஜை 12-30மணி

சாயரன பூஜை 5-00மணி

இரவு பூஜை 8-30மணி

திருவிழா மற்றும் வியாழக்கிழமையில் பூஜைகள் மாறுதலுக்குட்பட்டவை. வியாழக்கிழமை காலை 5.30 மணியிலிருந்து தொடர்ந்து பூஜை, மற்றும் அர்ச்சனை இரவு பூஜை 10.30மணி வரையிலும் நடைபெறுகிறது. காலை மற்றும் உச்சிக்கால பூஜையின்போது தயாராகும் நைவேத்தியத்தை தேசாந்திரிகளுக்கு வழங்கப்படுகிறது.




213312

